ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் ஆதிசங்கர ஸ்ரீ பகவத் பாதர்கள் அருளிய

# ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகா







ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்.

श्रीकामकोटिग्रन्थावलिः ७

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य-
श्रीजगद्गुरु श्रीमच्छंकरभगवत्पादैः कृता

# ॥ श्री प्रश्नोत्तररत्नमालिका ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीजगद्गुरु
श्रीकाञ्चीकामकोटिपीठाधिप श्रीचन्द्रशेखरेन्द्रसरस्वती
श्रीपादोपदिष्टद्राविडतात्पर्यसहिता



श्रीकामकोटिर्विजयते



श्रीकामकोटिकोशस्थानेन प्रकाशिता
श्रीशंकरमठालयः, कुम्भघोणम्

मूल्यम् सार्धाणकद्वयम्]        1943        [स्वाम्यं कोशस्थानस्यैव

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் ஆதிசங்கர ஸ்ரீ பகவத் பாதர்கள்
இயற்றிய

# ஸ்ரீ
# ப்ரச்நோத்தர ரத்நமாலிகா

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
தமிழில் உபதேசித்தருளிய பிரகாரம்
அவர்கள் ஸ்ரீமுகத்தோடு பதிப்பிக்கப் பெற்றது.

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
ஸ்ரீ சங்கர மடம், கும்பகோணம்

பதிப்புரிமை] 1943 [விலை அணா 2½

21-4

श्रीः




श्रीमत् परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकरभगवत्पादप्रतिष्ठित-
श्रीकाञ्ची. कामकोटिपीठाधिप जगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्र-
सरस्वती श्रीपादैः क्रियते नारायणस्मृतिः ॥

**श्रीप्रश्नोत्तररत्नमालिका** नाम श्रीमदाचार्यभगवत्पादैरनुगृहीतः प्रवृत्ति-निवृत्तिमार्गद्वयसारात्मकः सरळमधुरपदयोजनारमणीयतया गीर्वाणभाषाभ्यासिनो बालानपि पाठयितुमर्हश्च अनुत्तमो ग्रन्थः श्रीकामकोटिकोशस्थानात् अचिरात् प्रकाशिष्यमाणः सर्वेषामास्तिकानां पठनमननाद्युपयोगी सन् भूयसे श्रेयसे भूयादित्याशास्महे ॥

मद्रास् आमूर्
श्रीशा० शके २८६५
आश्विन कृ० ४॥

इति
नारायणस्मृतिः ॥

ஶ்ரீ:

முத்ரை

ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யர்களான ஸ்ரீமத் சங்கர பகவத் பாதர்களினுல் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதீச்வரர்களான ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதர்களால் நாராயண ஸ்மரணம் செய்யப்படுகின்றது.

ஸ்ரீப்ரஶ்னோத்தர ரத்னமாலிகா என்று ஸ்ரீமத் ஆசார்ய பகவத்பாதர்களால் அருளப் பெற்றதும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி என்னும் இரண்டு மார்க்கங்களின் ஸாரமாக வுள்ளதும் எளிய இனிய பதங்களை உபயோகித்து அழகாக அமைந்திருப்பதால் ஸம்ஸ்க்ருத பாஷையைக் கற்கும் பாலர்களையும் படிக்கச் செய்வதற்கு ஏற்றதுமான உயர்வற்ற நூலானது ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தினின்றும் சீக்கிரத்தில் வெளியிடப்பெற்று எல்லா ஆஸ்திகர்களாலும் படிப்பது மனனஞ் செய்வது முதலியவற்றிற்கு உபயோகமாகி மேன் மேலும் சிரேயஸைத் தருவதாகுக என்று ஆசீர்வதிக்கின்றோம்.

முகாம்: ஆமூர்
ஸ்ரீஶோபகருத் 1865
ஆஶ்வின. க்ரு. ௬ ||
(17—10—'43.)

இப்படிக்கு
நாராயண ஸ்ம்ருதி:.



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் ஆதிசங்கர ஸ்ரீ பகவத்பாதர்கள்

॥ श्रीगुरुभ्यो नमः ॥

श्रीमदादिशंकरभगवत्पादकृता

# ॥ प्रश्नोत्तर-रत्नमालिका ॥



कः खलु नालंक्रियते दृष्टादृष्टार्थसाधनपटीयान् ।
अमुया कण्ठस्थितया प्रश्नोत्तररत्नमालिकया ॥ १ ॥

இஹபர சிரேயஸ்ஸை யடையும் சாமர்த்தியமுள்ளவன் எவன்தான் இந்த பிரச்னோத்தர ரத்ன மாலிகையை மனதில் வாங்கி இதனால் அலங்கரிக்கப்படவில்லை ?

भगवन्किमुपादेयं? गुरुवचनं, हेयमपि च किम्? अकार्यम् ।
को गुरुः? अधिगततत्त्वः शिष्यहितायोद्यतः सततम् ॥ २ ॥

கேள்வி:—ஸ்வாமி, கிரஹித்துக்கொள்ள வேண்டியது என்ன ?

பதில் :—குரு வசனம்.

கே :—தள்ளவேண்டியது என்ன ?

ப :—அகார்யம்.

கே :—குரு யார் ?

ப :—உண்மையை அறிந்தவர். தன்னை அண்டின சிஷ்யர்களின் க்ஷேமத்திற்காக இடைவிடாது பாடுபடுபவர்.

त्वरितं किं कर्तव्यं विदुषां? संसारसंततिच्छेदः ।
किं मोक्षतरोर्बीजं? सम्यक्ज्ञानं क्रियासिद्धम् ॥ ३ ॥

கே :—அறிவுள்ளவன் துரிதமாக செய்யவேண்டியது என்ன?

ப :—ஸம்ஸார பரம்பரையைக் கத்தரித்தல். (செத்துச் செத்துப் பிறவாமல் மோக்ஷமடைவது.)

கே :—மோக்ஷ மரத்துக்கு விதை எது?

ப :—உள்ளதை உள்ளபடி அறிந்து காரியத்தில் காட்டுவது.

कः पथ्यतरो? धर्मः, कः शुचिरिह? यस्य मानसं शुद्धम्।
कः पण्डितो? विवेकी, किं विषम्? अवधीरणा गुरुषु ॥ ४ ॥

கே :—எது பத்தியம் (ஹிதமானது)?

ப :—தர்மம்.

கே :—எவன் சுத்தன்?

ப :—எவன் மனது சுத்தமாக இருக்கிறதோ அவன்.

கே :—எவன் பண்டிதன்?

ப :—விவேகி (விவேகத்தையுடையவன்.)

கே :—எது விஷம்?

ப :—பெரியோர் வார்த்தையை அலட்சியம் செய்வது.

किं संसारे सारं? बहुशोऽपि विचिन्त्यमानमिदमेव।
किं मनुजेष्विष्टतमं? स्वपरहितायोद्यतं जन्म ॥ ५ ॥

கே :—ஸம்ஸாரத்தில் ஸாரமெது?

ப :—அடிக்கடி இதை நினைத்துக்கொண்டிருப்பதே. (ஸம்ஸாரத்தில் ஸாரமெது என்று நினைத்துக்கொண்டே இருப்பதால் பற்றுவிட்டுப் பிறப்பறுக்கலாம்.)

கே :—மனிதர்கள் வேண்ட வேண்டியது எது?

ப:—தான், பிறர் இரண்டுபேரின் க்ஷேமத்திற்காக ஈடுபடும் ஜன்மம்.

मदिरेव मोहजनकः कः? स्नेहः, के च दस्यवो? विषयाः ।
का भववल्ली? तृष्णा, को वैरी? यस्त्वनुद्योगः ॥ ६ ॥

கே:—கள்போல் மயக்கத்தை உண்டுபண்ணுவது எது?

ப:—பற்றுதல் (ஆசை, ஸ்நேகம்.)

கே:—திருடர்கள் யார்?

ப:—இந்திரியங்களை இழுத்துக்கொண்டு போகும் விஷயங்கள் தான்.

கே:—ஸம்ஸாரக் கொடி எது?

ப:—ஆசை தான்.

கே:—சத்துரு யார்?

ப:—சோம்பேறித்தனமே.

कस्माद्भयमिह? मरणात्, अन्धादिह को विशिष्यते? रागी ।
कः शूरो? यो ललनालोचनबाणैर्न च व्यथितः ॥ ७ ॥

கே:—எல்லோரும் பயப்படுவது எதனிடம்?

ப:—மரணத்தினிடம்.

கே:—குருடனைக்காட்டிலும் குருடன் யார்?

ப:—ஆசையுள்ளவன்.

கே:—சூரன் யார்?

ப:—துன்மார்க்கத்தில் மனம்போகாமல் அடக்குகிறவன். (ஸ்த்ரீகளது பார்வைகளான பாணங்களால் அடிபடாதவன்.)

पातुं कर्णाञ्जलिभिः किममृतमिह युज्यते? सदुपदेशः ।
किं गुरुताया मूलं? यदेतदप्रार्थनं नाम ॥ ८ ॥

கே:—காதாகிய அஞ்ஜலியால் சாப்பிடக்கூடிய அமிருதம் எது? (இரண்டு கைகளையும் சேர்த்துக் குவித்துக் கொள்வது அஞ்ஜலி. காது குவிந்திருப்பதால் அஞ்ஜலி என்று சொல்லப்பட்டிருக்கிறது.)

ப:—ஸாதுக்களுடைய உபதேசம்.

கே:—மதிப்புக்கு மூலம் எது?

ப:—ஒருவனை எதையும் கேட்காதிருத்தல்.

किं गहनं? स्त्रीचरितं, कश्चतुरो? यो न खण्डितस्तेन ।
किं दुःखम्? असंतोषः, किं लाघवम्? अधमतो याच्ञा ॥ ९ ॥

கே:—அளவிட முடியாதது எது?

ப:—பெண்களின் நடை.

கே:—ஸமர்த்தன் யாவன்?

ப:—பெண்களின் நடையினால் வஞ்சிக்கப்படாதவன்.

கே:—துயரம் யாது?

ப:—திருப்தியின்மை.

கே:—கீழ்மை யாது?

ப:—கீழ்ப்பட்டவனிடத்தில் யாசிப்பது.

किं जीवितम्? अनवद्यं, किं जाड्यं? पाठतोऽप्यनभ्यासः ।
को जागर्ति? विवेकी, का निद्रा? मूढता जन्तोः ॥ १० ॥

கே:—உயர்ந்த ஜீவனம் யாது?

ப:—குற்றமின்மை.

கே:—அறிவின்மை யாது?

ப :—படிப்பதிலும் அப்பியாஸமின்றிருத்தல்.

கே :—விழிப்புடையோன் எவன்?

ப :—விவேகமுள்ளவன்.

கே :—உறக்கம் யாது?

ப :—ஜீவர்களது மூடத்தன்மை.

नलिनीदलगतजलवत्तरलं किं? यौवनं धनं चायुः।
कथय पुनः के शशिनः किरणसमाः? सज्जना एव ॥ ११ ॥

கே :—தாமரையிலைத் தண்ணீர்போல் நிலையில்லாதன எவை?

ப :—இளமை, செல்வம், ஆயுள் என்பன.

கே :—சந்திரகிரணம் போன்றவர் (பிறருக்கு ஹிதஞ் செய்பவர்) யாவர்?

ப :—நல்லோரே

को नरकः? परवशता, किं सौख्यं? सर्वसङ्गविरतिर्या।
किं सत्यं? भूतहितं, प्रियं च किं प्राणिनाम्? असवः ॥ १२ ॥

கே :—நரகம் யாது?

ப :—பிறர் வசமாயிருத்தல்

கே :—ஸௌக்யம் யாது?

ப :—ஸர்வ ஸங்க பரித்யாகம்.

கே :—ஸத்யம் எது?

ப :—ஜீவர்களுக்கு ஹிதமானது.

கே :—பிராணிகளுக்குப் பிரியமுள்ளது யாது?

ப :—பிராணன்.

कोऽनर्थफलो? मानः, का सुखदा? साधुजनमैत्री ।
सर्वव्यसनविनाशे को दक्षः? सर्वथा त्यागी ॥ १३ ॥

கே:—எது அனர்த்தத்தைத் தரும்?

ப:—அகம்பாவம்.

கே:—எது ஸுகத்தைத் தரும்?

ப:—(ஸத்ஸங்கம்) நல்லவர்களின் சிநேகம்.

கே:—எல்லா துக்கங்களையும் தொலைப்பதில் எவன் கெட்டிக்காரன்?

ப:—ஒன்றும் வேண்டாமென்று விட்டுக் கொடுப்பவன்.

किं मरणं? मूर्खत्वम्, किं चानर्घं? यदवसरे दत्तम् ।
आमरणात्किं शल्यं? प्रच्छन्नं यत्कृतं पापम् ॥ १४ ॥

கே—மரணத்திலும் பெரியது எது?

ப:—அசட்டுத்தனம்.

கே:—விலை மதிக்கப்படாதது எது?

ப:—ஸமயத்தில் கொடுத்தது.

கே:—சாகும்வரையில் குத்திக்கொண்டிருப்பது எது?

ப:—இரஹஸ்யத்தில் செய்த பாபம்.

कुत्र विधेयो यत्नो? विद्याभ्यासे सदौषधे दाने ।
अवधीरणा क्व कार्या? खलपरयोषित्परधनेषु ॥ १५ ॥

கே:—எந்த விஷயத்திலே பிரயத்தினம் செய்யவேண்டும்?

ப:—வித்தியாப்யாஸம், நல்லமருந்து, தானம்செய்தல், இவைகளிலே பிரயத்தினம் வேண்டும்.

கே :—அலக்ஷ்யம் செய்யவேண்டியவை எவை ?

ப :—கெட்டவர்கள், பிறருடைய மனைவி, பிறருடைய பொருள் என்பவை.

काहर्निशमनुचिन्त्या ? संसारासारता न तु प्रमदा ।
का प्रेयसी विधेया ? करुणा दीनेषु सज्जने मैत्री ॥ १६ ॥

கே :—இராப்பகல் நினைக்கவேண்டியது எது ?

ப :—ஸம்ஸாரத்தில் ஸாரம் இல்லை என்பது—ஸ்த்ரீயன்று.

கே :—பிரியமாகச் செய்யவேண்டியது எது ?

ப :—தீனர்களிடத்தில் கருணையும் ஸாதுக்களிடத்தில் சிநேகமும்.

कण्ठगतैरप्यसुभिः कस्य ह्यात्मा न शक्यते जेतुम् ।
मूर्खस्य शङ्कितस्य च विषादिनो वा कृतघ्नस्य ॥ १७ ॥

கே :—பிராணன் போவதாயிருந்தாலும், எவனுடைய ஆத்மாவை நல்வழிப்படுத்த முடியாது ?

ப :—போக்கிரி, நித்ய ஸந்தேகி, அழுமூஞ்சி, நன்றியில்லாதவன்.

कः साधुः ? सद्वृत्तः, कमधममाचक्षते ? त्वसद्वृत्तम् ।
केन जितं जगदेतत् ? सत्यतितिक्षावता पुंसा ॥ १८ ॥

கே :—ஸாது யார் ?

ப :—நல்ல நடத்தையுடையவன்.

கே :—எவன் அதமன் ?

ப :—கெட்ட நடத்தை யுடையவன்.

கே:—ஜகத்தை யாரால் ஜயிக்க முடியும்?

ப:—ஸத்தியமும் பொறுமையுமுள்ளவனால்.

कस्मै नमांसि देवाः कुर्वन्ति? दयाप्रधानाय।
कस्मादुद्वेगः स्यात्? संसारारण्यतः सुधियः॥ १९॥

கே:—எவனைத் தேவர்களும் கும்பிடுகிறார்கள்?

ப:—தயை யுடையவனை.

கே:—எதைக் கண்டு நடுங்க வேண்டியது?

ப:—ஸம்ஸாரமாகிய காட்டைக்கண்டு நல்லறிவுள்ளவர் பயப்படவேண்டும்.

कस्य वशे प्राणिगणः? सत्यप्रियभाषिणो विनीतस्य।
क्व स्थातव्यं? न्याय्ये पथि दृष्टादृष्टलाभाढ्ये॥ २०॥

கே:—ஜீவராசிகள் எவனுக்கு வசமாகின்றன?

ப:—ஸத்யமும் பிரியமுமான வசனமுடைய வணக்கமுள்ளவனுக்கு.

கே:—நிற்கவேண்டியது எங்கே?

ப:—(காணப்படுவனவும் காணப்படாதனவுமாகிய) இஹபர லாபங்கள் நிரம்பிய வழியில்.

कोऽन्धो? योऽकार्यरतः, को बधिरो? यो हितानि न शृणोति।
को मूको? यः काले प्रियाणि वक्तुं न जानाति॥ २१॥

கே:—குருடன் யார்?

ப:—படித்திருந்தும் கெட்டகாரியஞ் செய்பவன்.

கே:—செவிடன் யார்?

ப:—ஹிதத்தைக் கேட்காதவன்.

கே:—ஊமை யார்?

ப:—இனிமையான வார்த்தைகளைச் சரியான காலத்தில் சொல்ல அறியாதவன்.

किं दानम्? अनाकाङ्क्षं, किं मित्रं? यो निवारयति पापात्।
कोऽलंकारः? शीलं, किं वाचां मण्डनं? सत्यम्॥ २२॥

கே:—தானம் என்பது எது?

ப:—கேட்காது கொடுத்தல்.

கே:—ஸ்நேகிதன் யார்?

ப:—பாவம் செய்யாது தடுப்பவன்.

கே:—அழகு எது?

ப:—சீலம்.

கே:—வாக்கிற்கு அழகு எது?

ப:—ஸத்யம்.

विद्युद्विलसितचपलं किं? दुर्जनसंगतिर्युवतयश्च।
कुलशीलनिष्प्रकम्पाः के कलिकालेऽपि? सज्जना एव॥ २३॥

கே:—மின்னலொளிபோல் சஞ்சலமானவை யாவை?

ப:—துர்ஜனர் ஸங்கமும் ஸ்திரீகளும்.

கே:—கலிகாலத்திலும் குலசீலத்தினின்றும் சலிக்காதவர் யாவர்?

ப:—ஸத் புருஷர்களே.

चिन्तामणिरिव दुर्लभमिह किं? कथयामि तच्चतुर्भद्रम्।
किं तद्वदन्ति भूयो विधूततमसो विशेषेण॥ २४॥
दानं प्रियवाक्सहितं ज्ञानमगर्वं क्षमान्वितं शौर्यम्।
वित्तं त्यागसमेतं दुर्लभमेतच्चतुर्भद्रम्॥ २५॥

கே :—சிந்தாமணிபோல் துர்லபமானது (கிடைத்தற் கரியது) எது ?

ப :—சதுர்பத்ரம். (பத்ரமாக இருப்பது பத்ரம், சுபம்).

கே :—அந்த சதுர்பத்ரம் என்னவென்று அறிஞர் சொல்லுகின்றனர் ?

ப :—பிரிய வாக்குடன் தானம், கர்வமில்லாத ஞானம், க்ஷமையுடன் கூடிய சூரத்தனம், தியாகத்துடன் கூடிய செல்வம்.

किं शोच्यं? कार्पण्यं, सति विभवे किं प्रशस्तम्? औदार्यम् ।
कः पूज्यो विद्वद्भिः? स्वभावतः सर्वदा विनीतो यः ॥ २६ ॥

கே :—பரிதாபப்படத் தக்கது எது ?

ப :—கார்ப்பண்ணியம். (கருமித்தனம், தனக்குமில்லாமல் பிறருக்குமில்லாமல் இகத்துக்குமில்லாமல் பரத்துக்குமில்லாமல் நிரம்பவைத்துக் கொண்டிருத்தல்.)

கே :—ஸௌகரியங்கள் இருப்பின் எது பிரசஸ்தம் (புகழப்படுவது) ?

ப :—ஔதார்யம்.

கே :—அறிவுடையோர் யாரைப் பூஜிப்பர் ?

ப :—இயல்பாகவே எப்பொழுதும் வணக்கமுள்ளோரை.

(காரியத்தை உத்தேசித்து விநயத்துடன் இருப்பது சுவபாவ விநயமாகாது. காரியத்தை உத்தேசித்து விநயத்துடன் இருப்பவன் ஏற்ற மரத்துக்குச் சமானமென்று ஒரு சுலோக மிருக்கிறது. சால் நிரம்பினவுடன் ஏற்ற மரத்தின் தலை ஆகாயத்திலிருக்கும்; சால் வடிந்ததும் தலை குனிந்து விடும். அப்படியே காரியத்தை உத்தேசித்து விநயத்துடன் இருப்பவன் ஜீவனங் கிடைக்காதபோது தலையைத் தொங்

கப் போடுவான்; ஜீவனம் கிடைத்துவிடின் தலை விரைத்துக் கொள்ளும்.)

कः कुलकमलदिनेशः? सति गुणविभवेऽपि यो नम्रः।
कस्य वशे जगदेतत्? प्रियहितवचनस्य धर्मनिरतस्य ॥२७॥

கே:—நாம் பிறந்துள்ள குலமாகிய தாமரை எந்த சூரியனைக் கண்டால் ஆனந்தத்துடன் பிரகாசிக்கும்?

ப:—குணங்கள் பரிபூர்ணமாக இருந்தும், பரிபூர்ணமான விநயத்துடன் இருப்பவனைக் கண்டால் குலமாகிய தாமரை பிரகாசிக்கும்.

கே:—இந்தப் பிரபஞ்சம் யாருக்கு வசப்படும்?

ப:—பிரியமாகப் பேசக் கற்றுக்கொண்டு தர்மத்தை அனுஷ்டிப்பவனுக்குப் பிரபஞ்சம் வசப்பட்டுவிடும்.

(ஜகத்தை வசியப்படுத்துகிறதற்காக விநயத்தைக் கைக்கொள்ளக்கூடாது. விநயத்துடன் இருந்தால், ஜகத்து தானாக வசப்பட்டுவிடும்).

विद्वन्मनोहरा का? सत्कविता बोधवनिता च।
कं न स्पृशति विपत्तिः? प्रवृद्धवचनानुवर्तिनं दान्तम् ॥२८॥

கே:—வித்வான்களின் மனதைக் கவர்வது யாது?

ப:—நல்ல கவிதையும் புத்தி எனும் ஸ்திரீயும்.

கே:—விபத்து எவனைத் தீண்டாது?

ப:—பெரியோர் வார்த்தையை அனுஸரித்து நடப்பவனையும் அடக்கமுள்ளவனையும்.

कस्मै स्पृहयति कमला? त्वनलसचित्ताय नीतिवृत्ताय।
त्यजति च कं सहसा? द्विजगुरुसुरनिन्दाकरं च सालस्यम् ॥२९॥

கே :—லக்ஷ்மி யாரை விரும்புவாள் ?

ப :—சுருசுருப்பான சித்தமும் நீதி தவறாத நடையுமுடையவனை.

கே :—எவனைவிட்டு விரைவில் விலகுவாள் ?

ப :—பிராம்மணனையும், குருவையும், தேவர்களையும் நிந்திப்பவர்களையும் சோம்பேறித்தன முடையவனையும்.

कुत्र विधेयो वासः? सज्जननिकटेऽथवा काश्याम् ।
कः परिहार्यो देशः? पिशुनयुतो लुब्धभूपश्च ॥ ३० ॥

கே :—வாஸஞ் செய்யவேண்டியது எங்கே ?

ப :—நல்லவர்களுடைய ஸமீபத்தில், அல்லது, காசி-க்ஷேத்திரத்தில்.

கே :—விட்டு விலகவேண்டிய தேசம் யாது ?

ப :—கீழ் மக்களையும் லோபியாயுள்ள அரசனையும் உடைய தேசம்.

केनाशोच्यः पुरुषः? प्रणतकलत्रेण धीरविभवेन ।
इह भुवने कः शोच्यः? सत्यपि विभवे न यो दाता ॥ ३१ ॥

கே :—எதனால் மனிதன் துக்கமில்லாதவனாயிருப்பான் ?

ப :—வணக்கமுள்ள பெண்சாதியாலும், நிலையுள்ள ஐச்வர்யத்தாலும்.

கே :—இவ்வுலகில் விசனிக்கப்படத் தக்கவன் எவன் ?

ப :—பொருளிருந்தும் கொடாதவன்.

किं लघुताया मूलं? प्राकृतपुरुषेषु या याच्ञा ।
रामादपि कः शूरः? स्मरशरनिहतो न यश्चलति ॥ ३२ ॥

கே :—இகழ்ச்சிக்குக் காரணம் எது?

ப :—தாழ்ந்தவர்களிடம் யாசிப்பது.

கே :—ஸ்ரீராமனைவிட சூரன் யார்?

ப :—மன்மத பாணங்களால் அடிக்கப்பட்டும் தன்னிலை தளராதவன்.

किमहर्निशमनुचिन्त्यं? भगवच्चरणं न संसारः।
चक्षुष्मन्तोऽप्यन्धाः के स्युः? ये नास्तिका मनुजाः ॥ ३३ ॥

கே :—இரவும் பகலும் சிந்திக்கத் தக்கது எது?

ப :—ஈச்வரனது பாதாரவிந்தங்களே—ஸம்ஸாரம் அன்று.

கே :—கண்ணிருந்தும் குருடரா யிருப்பவர் யார்?

ப :—நாஸ்திகர்களான மனிதர்கள்.

कः पङ्गुरिह प्रथितो? व्रजति च यो वार्धके तीर्थम्।
किं तीर्थमपि च मुख्यं? चित्तमलं यन्निवर्तयति ॥ ३४ ॥

கே :—முடவன் யார்?

ப :—முதிர்ந்த வயதில் தீர்த்த யாத்திரை போகிறவன்.

கே :—முக்கியமான தீர்த்தம் எது?

ப :—சித்தத்திலிருக்கும் அழுக்கை எது நீக்குகிறதோ அதுதான்.

किं स्मर्तव्यं पुरुषैः? हरिनाम सदा, न यावनी भाषा।
को हि न वाच्यः सुधिया? परदोषश्चानृतं तद्वत् ॥ ३५ ॥

கே :—மனிதர்களால் ஸ்மரிக்கத்தக்கது எது?

ப:—எப்பொழுதும் ஹரிநாமமே—ம்லேச்ச பாஷை யன்று.

கே:—நல்ல புத்தியுடையவனால் சொல்லத்தகாதது எது?

ப:—பிறரது குற்றமும், அஸத்யமும்.

किं संपाद्यं मनुजैः? विद्या वित्तं बलं यशः पुण्यम्।
कः सर्वगुणविनाशी? लोभः, शत्रुश्च कः? कामः॥ ३६॥

கே:—மனிதர்களால் ஸம்பாதிக்கத்தக்கது எது?

ப:—கல்வி, செல்வம், வலிமை, புகழ், புண்யம், இவைகள்.

கே:—ஸகல குணங்களையும் அழிப்பது எது?

ப:—லோபம் (கருமித்தனம்.)

கே:—பகைவன் எவன்?

ப:—காமம்.

का च सभा परिहार्या? हीना या वृद्धसचिवेन।
इह कुत्रावहितः स्यान्मनुजः? किल राजसेवायाम्॥ ३७॥

கே:—எந்த ஸபையைவிட்டு விலக வேண்டும்?

ப:—வயது முதிர்ந்த மந்திரிகளில்லாத ஸபையை.

கே:—இவ்வுலகில் மனிதன் எவ்விஷயத்தில் ஜாக்கிரதையுடன் இருக்கவேண்டும்?

ப:—ராஜ ஸேவை செய்வதில்.

प्राणादपि को रम्यः? कुलधर्मः साधुसङ्गश्च।
का संरक्ष्या? कीर्तिः पतिव्रता नैजबुद्धिश्च॥ ३८॥

கே :—பிராணனைவிட பிரியமானவை எவை?

ப :—குலதர்மமும், ஸாதுக்களின் சேர்க்கையும்.

கே :—இரட்சிக்கத்தக்கவை யாவை?

ப :—கீர்த்தியும், கற்புள்ள மனைவியும், சுயபுத்தியுமாம்.

का कल्पलता लोके? सच्छिष्यायार्पिता विद्या।
कोऽक्षयवटवृक्षः स्यात्? विधिवत्सत्पात्रदत्तदानं यत्॥ ३९॥

கே :—லோகத்தில் கற்பகக்கொடியாயுள்ளது எது?

ப :—ஸத்சிஷ்யனுக்கு அர்ப்பணம் செய்யும் படிப்பு.

கே :—அக்ஷயவடம் போன்றது எது?

ப :—விதிப்படி ஸத்பாத்திரத்தில் கொடுக்கப்படும் தானம்.

किं शस्त्रं सर्वेषां? युक्तिः, माता ह का? धेनुः।
किं नु बलं? यद्धैर्यं, को मृत्युः? यदवधानरहितत्वम्॥ ४० ॥

கே :—எந்த ஆயுதம் எல்லோருடைய கையிலும் உள்ளது?

ப :—யுக்தி (நியாய பூர்வமாக நிரூபணம் செய்யக் கூடிய சக்தி.)

கே :—எல்லோருக்கும் தாயார் யார்?

ப :—பசு. (தன் குழந்தைக்குப் பால் கொடுத்து விட்டு ஊருக்கும் பால் கொடுக்கும் தாய் பசு. அதை நாம் இரட்சிக்க வேண்டும்.)

கே :—எது ஸேனை?

ப :—தைரியம்.

கே :—எது யமன்?

ப :—கவனமில்லாதிருந்துவிடல்.

कुत्र विषं? दुष्टजने, किमिहाशौचं भवेत्? ऋणं नृणाम् ।
किमभयमिह? वैराग्यं, भयमपि किं? वित्तमेव सर्वेषाम् ॥ ४१ ॥

கே :—விஷம் எங்கு இருக்கிறது?

ப :—துஷ்ட ஜனங்களிடத்தில் இருக்கிறது.

கே :—தீட்டு எது?

ப :—கடன் தான். (கடன்காரனுக்கு மனிதர் ஒளிவது போல் வேறு எதற்கும் ஒளிவதில்லை. தீட்டில் கோவிலுக்குப் போகக்கூடாது; சபைக்குப் போகக்கூடாது. கடன் பட்டவனும் அப்படியே போகமாட்டான்.)

கே :—அபயம் எது? (பயப்படவேண்டாத நிலைமை).

ப :—வைராக்கியம். (ஆசையை விட்டுவிடின், அதுவே அபயம்.)

கே :—எது பயம்?

ப :—பணம் தான்.

का दुर्लभा नराणां? हरिभक्तिः, पातकं च किं? हिंसा ।
को हि भगवत्प्रियः स्यात्? योऽन्यं नोद्वेजयेदनुद्विग्नः ॥ ४२ ॥

கே :—நரர்களுக்குத் துர்லபமானது (கிடைத்தற்கரியது.) எது?

ப :—ஹரிபக்தி.

கே :—எது பாதகம்?

ப :—இம்சித்தல்.

கே :—பகவானுக்கு யாரிடத்தில் பரம ப்ரியம்?

ப :—தானும் மனதில் உபத்திரவப்படாமல் பிறருக்கும் உபத்திரவத்தை நினைக்காதவனிடத்தில்.

कस्मात्सिद्धिः? तपसो, बुद्धिः क नु? भूसुरे, कुतो बुद्धिः।
वृद्धोपसेवया, के वृद्धाः? ये धर्मतत्त्वज्ञाः॥ ४३॥

கே :—எதனால் காரியஸித்தி உண்டாகிறது?

ப :—தபஸினால். (ஏகாக்ரசித்தனாக ஒரு காரியத்தில் நினைவு செலுத்துவதால்.)

கே :—புத்தி எங்கிருக்கிறது?

ப :—பிராம்மணனிடத்தில்.

கே :—நிஜமான புத்தி எது?

ப :—பெரியோரை அடுத்துச் சிச்ருஷைசெய்து அடையும் புத்தி.

கே :—பெரியோர் யார்?

ப :—தர்ம தத்துவங்களை யறிந்தவர்கள். (அவர்கள் வயதில் சிறியோராக இருந்தாலும் பெரியோர்களே.)

संभावितस्य मरणादधिकं किं? दुर्यशो भवति।
लोके सुखी भवेत्को? धनवान्, धनमपि च किं? यतश्चेष्टम्॥ ४४॥

கே :—பேர் வாங்கியவனுக்கு மரணத்தைக்காட்டிலும் எது பெரியது?

ப :—அபகீர்த்தி.

கே :—எவன் ஸுகி?

ப :—தனவான்.

கே :—செல்வம் என்பது எது?

ப:—எதனால் இஷ்டஸித்தி உண்டாகுமோ அதுவே செல்வம்.

सर्वसुखानां बीजं किं? पुण्यं, दुःखमपि कुतः? पापात् ।
कस्यैश्वर्यं? यः किल शंकरमाराधयेद्भक्त्या ॥ ४५ ॥

கே.—எல்லா ஸுகத்திற்கும் மூலம் எது?
ப:—புண்யம்.
கே:—துக்கத்திற்கு மூலம் எது?
ப:—பாபம்.
கே:—ஐச்வரியம் யாருக்கு உண்டாகும்?
ப:—ஈச்வரனைப் பக்தியுடன் ஆராதிப்பவனுக்கு.

को वर्धते? विनीतः, को वा हीयेत? यो दृप्तः ।
को न प्रत्येतव्यो? ब्रूते यश्चानृतं शश्वत् ॥ ४६ ॥

கே:—எவன் முன்னுக்கு வருவான்?
ப:—விநயமுடையவன்.
கே:—எவன் நஷ்டமடைவான்?
ப:—கர்வமுள்ளவன்.
கே:—எவனை நம்பக்கூடாது?
ப:—எப்பொழுதும் பொய் சொல்பவனை.

कुत्रानृतेऽप्यपापं? यच्चोक्तं धर्मरक्षार्थम् ।
को धर्मो? अभिमतो यः शिष्टानां निजकुलीनानाम् ॥ ४७ ॥

கே—பொய் சொல்வது எப்பொழுது பாபமாகாது?
ப:—தர்மத்தை இரட்சிப்பதற்காகச் சொல்லப்பட்ட பொய் பாபமாகாது.

கே :—எது தர்மம்?

ப :—நமது வம்சத்தில் பிறந்த பெரியோர்களில் அனுஷ்டானமுள்ளவர்கள் அனுஷ்டித்த தர்மமே நமக்கும் தர்மம்.

साधुबलं किं? दैवं, कः साधुः? सर्वदा तुष्टः ।
दैवं किं? यत्सुकृतं, कः सुकृती? श्लाघ्यते च यः सद्भिः ॥ ४८ ॥

கே :—ஸாதுவுக்குப் பலம் யார்?

ப :—தெய்வம்.

கே :—ஸாது யார்?

ப :—எப்பொழுதும் ஸந்துஷ்டியுடன் இருப்பவன்; அழாதவன்.

கே :—தெய்வம் என்பது என்ன?

ப :—நீ செய்த நல்ல கார்யமே

கே :—நல்வினை உடையவன் யார்?

ப :—நல்லவர்களால் சிலாகிக்கப்படுகிறவன்.

गृहमेधिनश्च मित्रं किं? भार्या, को गृही च? यो यजते ।
को यज्ञो? यः श्रुत्या विहितः श्रेयस्करो नृणाम् ॥ ४९ ॥

கே :—க்ரஹஸ்தாச்ரமத்தில் மித்திரன் யார்?

ப :—மனைவி.

கே :—கிருஹஸ்தன் யார்?

ப :—யக்ஞங்களைச் செய்கிறவன்.

கே :—யக்ஞமென்பது என்ன?

ப :—செய்யப்படவேண்டியது என்று வேதத்தால் எது விதிக்கப்பட்டு, நமக்கு சிரேயஸ்ஸைத் தருகின்றதோ அதுதான்.

कस्य क्रिया हि सफला? यः पुनराचारवाञ्शिष्टः।
कः शिष्टो? यो वेदप्रमाणवान्, को हतः? क्रियाभ्रष्टः॥ ५० ॥

கே :—கர்மானுஷ்டானம் எவனுக்குப் பலிக்கும்?

ப :—ஆசாரமுள்ளவனாகவும், சிஷ்டனாகவும் இருப்பவனுக்கு.

கே :—யார் சிஷ்டர்?

ப :—வேதத்தை ப்ரமாணமாக நம்பியவர்.

கே ;—எவன் இருந்தும் செத்தவன்?

ப :—கர்மாக்களைச் செய்யாதவன்.

को धन्यः? संन्यासी, को मान्यः? पण्डितः साधुः।
कः सेव्यो? यो दाता, को दाता? योऽर्थितृप्तिमातनुते॥ ५१॥

கே :—எவன் தன்யன்?

ப :—ஸந்யாஸீ.

கே :—எவன் பூஜிக்கப்படுகிறவன்?

ப :—படித்து ஸாதுவாக இருப்பவன்.

கே :—யாரை ஸேவிக்கவேண்டும்?

ப :—வள்ளலை.

கே :—வள்ளல் யார்?

ப :—யாசிப்பவனைத் திருப்தி செய்பவன்.

किं भाग्यं देहवताम्? आरोग्यं, कः फली? कृषिकृत्।
कस्य न पापं? जपतः, कः पूर्णो? यः प्रजावान्स्यात्॥ ५२॥

கே :—உடலெடுத்தோருக்குப் பெரிய பாக்யம் எது?

ப :—ஆரோக்கியம்.

கே ;—பயன் எவனுக்குக் கிடைக்கும்?




ப:—பிரயத்தனம் செய்கிறவனுக்கு.

கே:—பாபம் யாருக்கு இல்லை?

ப:—எப்பொழுதும் ஜபம் செய்கிறவனுக்கு.

கே:—நிறைந்தவன் யார்?

ப:—நல்ல பிள்ளைகளையுடையவன்.

किं दुष्करं नराणां? यन्मनसो निग्रहः सततम् ।
को ब्रह्मचर्यवान्स्यात्? यश्चास्खलितोर्ध्वरेतस्कः ॥ ५३ ॥

கே:—செய்யக் கஷ்டமானது எது?

ப:—இடைவிடாது மனதை தடுத்துக் கட்டிப்போடுவதே.

கே:—எவன் சரியான பிரம்மசாரி?

ப:—ஊர்த்துவ ரேதஸையுடையவன்.

का च परदेवतोक्ता? चिच्छक्तिः, को जगद्भर्ता ।
सूर्यः, सर्वेषां को जीवनहेतुः? स पर्जन्यः ॥ ५४ ॥

கே:—பரதேவதை யார்?

ப:—ஞானரூபிணியான அம்பிகை.

கே:—ஜகத்துக்குப் பர்த்தா யார்?

ப:—சூரியன் (அன்னம் போடுகிறவன்.)

கே:—எல்லோருடைய ஜீவனத்திற்கும் காரணம் எது?

ப:—மழை.

कः शूरो? यो भीतत्राता, त्राता च कः? स गुरुः ।
को हि जगद्गुरुरुक्तः? शंभुः, ज्ञानं कुतः? शिवादेव ॥ ५५ ॥

கே:—சூரன் யார்?

ப:—பயப்பட்டவனை ரட்சிக்கிறவன்.

கே:—இரட்சிக்கிறவன் யார்?
ப:—ஸத்குரு.
கே:—ஜகத்குரு யார்?
ப:—சம்பு.
கே:—ஞானம் எங்கிருந்து கிடைக்கும்?
ப:—அவரிடமிருந்தே.

मुक्तिं लभेत कस्मात्? मुकुन्दभक्तेः, मुकुन्दः कः? ।
यस्तारयेदविद्यां, का चाविद्या? यदात्मनोऽस्फूर्तिः ॥ ५६ ॥

கே:—மோக்ஷம் எங்கிருந்து உண்டாகும்?
ப:—முகுந்த பக்தியால்.
கே:—முகுந்தன் யார்?
ப:—அவித்தையைத் தாண்டி வைப்பவர்.
கே:—அவித்தை என்பது என்ன?
ப:—ஆத்மாவை மறப்பது.

कस्य न शोको? यः स्यादक्रोधः, किं सुखं? तुष्टिः ।
को राजा? रञ्जनकृत्, कश्च श्वा? नीचसेवको यः स्यात् ॥ ५७ ॥

கே:—யாருக்குத் துக்கமில்லை?
ப:—கோபமற்றவனுக்கு.
கே:—ஸுகம் எது?
ப:—உள் சிரிப்பு. (பல் சிறிப்பன்று.)
கே:—ராஜா யார்?
ப:—இவனைப் போலில்லை என்னப்படுகிறவன்.
கே:—நாய் யார்?
ப:—நீசனை ஸேவிப்பவன் (துர்ப்பாக்கியமுள்ளவன்).

को मायी? परमेशः, क इन्द्रजालायते? प्रपञ्चोऽयम् ।
कः स्वप्ननिभो? जाग्रद्व्यवहारः, सत्यमपि च किं? ब्रह्म ॥ ५८ ॥

கே:—மாயையை அடக்கி ஆள்பவன் யார்?

ப:—பரமேச்வரன்.

கே:—எது இந்திர ஜாலம்?

ப:—பிரபஞ்சமே.

கே:—சொப்பனம் போன்றது எது?

ப:—ஜாக்கிராவஸ்தையிலுள்ள வியவகாரம்.

கே:—ஸத்யம் (எக்காலத்திலும் அழியாதது) எது?

ப:—பர ப்ரும்மம்.

किं मिथ्या? यद्विद्यानाश्यं, तुच्छं तु? शशविषाणादि ।
का चानिर्वचनीया? माया, किं कल्पितं? द्वैतम् ॥ ५९ ॥

கே:—மித்யை எது?

ப:—அறிவினால் நாசமாவது.

கே:—துச்சம் எது?

ப:—முயலின் கொம்பு முதலியன.

கே:—நிஜம் பொய் என்று சொல்ல முடியாதது எது?

ப:—மாயை.

கே:—அதனால் கல்பிக்கப்படுவது என்ன?

ப:—த்வைதம்.

किं पारमार्थिकं स्यात्? अद्वैतं, चाज्ञता कुतो? (अ)नादिः ।
वपुषश्च पोषकं किं? प्रारब्धं, चान्नदायि किं? चायुः ॥ ६० ॥

கே:—எது பாரமார்த்திகம்?

ப:—அத்வைதம்.

கே:—அக்ஞானம் எதனால் உண்டாகிறது?

ப:—அதற்கு ஆதியில்லை.

கே:—உடம்புக்குப் போஷணை கொடுப்பது எது?
ப:—பிராரப்தம் என்னும் கர்மா.
கே:—அன்னத்தைக் கொடுப்பது யாது?
ப:—ஆயுள்.

को ब्राह्मणैरुपास्यो? गायत्र्यर्काग्निगोचरः शंभुः।
गायत्र्यामादित्ये चाग्नौ शंभौ च किं नु? तत्तत्त्वम्॥ ६१॥

கே:—பிராம்மணன் யாரை உபாஸிக்கவேண்டும்?
ப:—காயத்ரி, சூரியமண்டலம், அக்னி இவைகளில் கோசரமாகவுள்ள சம்புவை.
கே:—காயத்திரி, சூரியன், அக்னி, சம்பு இவர்களிடத்திலுள்ளது என்ன?
ப:—அந்த சிவதத்வம்.

प्रत्यक्षदेवता का? माता, पूज्यो गुरुश्च कः? तातः।
कः सर्वदेवतात्मा? विद्याकर्मान्वितो विप्रः॥ ६२॥

கே:—பிரத்தியக்ஷ தேவதை யார்?
ப:—தாயார்.
கே:—பூஜிக்கவேண்டிய குரு யார்?
ப:—தகப்பனார்.
கே:—ஸகல தேவஸ்வரூபி யார்?
ப:—ஞான கர்மஸித்தியுடைய பிராம்மணன்.

कश्च कुलक्षयहेतुः? संतापः सज्जनेषु योऽकारि।
केषाममोघवचनं? ये च पुनः सत्यमौनशमशीलाः॥ ६३॥

கே:—குல நாசத்துக்குக் காரணம் எது?
ப:—ஸாது ஜனங்களுடைய இருதயத்தில் தாபத்தை உண்டாக்கும் செய்கை.

கே :—யாருடைய சொல் பலிக்கும்?

ப :—ஸத்திய விரதம், மௌனவிரதம், க்ஷமை ஆகிய வைகளை யுடையவர்களின் சொல்.

किं जन्म? विषयसङ्गः, किमुत्तरं जन्म? पुत्रः स्यात् ।
कोऽपरिहार्यो? मृत्युः, कुत्र पदं विन्यसेच्च? दृक्पूते ॥ ६४ ॥

கே :—ஜன்மத்துக்குக் காரணம் யாது?

ப :—விஷயத்தில் பற்று.

கே :—மேல் ஜன்மம் எது?

ப :—புத்திரன்.

கே :—பரிஹாரம் செய்ய முடியாதது எது?

ப :—யமன்.

கே.—காலை எங்கே வைக்கவேண்டும்?

ப :—கண்ணுக்கு பரிசுத்தம் என்று தெரிந்த இடத்தில்.

पात्रं किमन्नदाने? क्षुधितं, कोऽर्च्यो हि? भगवदवतारः ।
कश्च भगवान्? महेशः शङ्करनारायणात्मैकः ॥ ६५ ॥

கே :—அன்னதானத்திற்குப் பாத்திரன் யார்?

ப :—பசியுள்ளவன்.

கே :—யாரை அர்ச்சிக்க வேண்டும்?

ப :—பகவத் அவதாரத்தை.

கே :—பகவான் யார்?

ப :—சங்கரனும் நாராயணனுமாகிய ஒரே மூர்த்தி.

फलमपि भगवद्भक्तेः किं? तल्लोकस्वरूपसाक्षात्त्वम् ।
मोक्षश्च को? ह्यविद्यास्तमयः, कः सर्ववेदभूः? अथ चोम् ॥ ६६ ॥

கே :—பகவத் பக்திக்குப் பலன் யாது ?

ப :—பகவானுடைய லோக ஸாக்ஷாத்காரம்.

கே :—மோக்ஷம் எது ?

ப :—அவித்யையை அழித்தல்.

கே :—ஸகல வேதங்களுக்கும் உற்பத்தி(யும் லயமும்) எது ?

ப :—ஓம்.

इत्येषा कण्ठस्था प्रश्नोत्तररत्नमालिका येषाम् ।
ते मुक्ताभरणा इव विमलाश्चाभान्ति सत्समाजेषु ॥ ६७ ॥

இந்தப் பிர்ச்ஞோத்தர ரத்நமாலையைக் கழுத்தில் (கருத்தில்) தரித்தவர்கள் முக்தாபரணங்கள் போல் (முக்தர்களுக்குள் சிறந்தவர்கள் போல்) நல்லோர் நிறைந்த ஸபைகளில் பிரகாசிப்பார்கள்.

ப்ரச்ஞோத்தர ரத்நமாலையில் 67 சுலோகங்கள் இருக்கின்றன. 65 தான் நமதாசாரியாள் செய்ததாக நான் நினைக்கிறேன். ஓம் என்று 66-வது சுலோகத்தில் சொல்லி யிருப்பதுடன் அவர்கள் முடித்துவிட்டார்கள். முதல் சுலோகமும் கடைசி சுலோகமும் பக்தர்களால் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். நமதாசார்யாள் இயற்றிய கிரந்தங்களிலெல்லாம் இது இலகுவானது. இது ஸம்ஸ்கிருதம் படிக்கும் குழந்தைகளுக்கும் உபயோகப்படக் கூடியது.

இவ்வாறு ஸ்ரீ ஸ்வாமிகள் மயிலையில் உபதேசித்தார்கள்.

ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகை
முற்றிற்று.

---

ஸ்ரீ குருபாதார்ப்பணமஸ்து.

ஓம் தத் ஸத்.

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் பாஷ்யத்திற்கு

வே. நாராயணன் எழுதிய தமிழ் அனுவாதத்துடன் கூடியது.

திருத்திய இரண்டாம் பதிப்பு விலை ரூ. 1-4-0 தபாற்செலவு 0-4-0

உலகம் எங்கும் சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது; இப்போது பொதுஜனங்கள் செய்யவேண்டியது என்ன! அவர்கள் நன்மை பெறுவது எப்படி? லோக க்ஷேமத்தை நாடி அவர்கள் என்ன செய்யலாம்!

இந்தக் கேள்விகளுக்கு விடையாக அமைந்தது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம். பக்தியோடு இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணஞ் செய்தால் இவ்வுலகிலே சுகமாக வாழலாம்; மேலுலகிலும் சுகத்தைப் பெறலாம்; பயம் நீங்கிவிடும்; வந்த ஆபத்து விலகிப்போம்; நோய் பிடிக்காது; எல்லா இடையூறுகளையும் சுலபமாகக் கடந்து விடலாம்; சுகம் உண்டு, செல்வம் உண்டு, புகழ் உண்டு. கோபம், லோபம், மோஹம் முதலிய துர்க்குணங்கள் நம்மைவிட்டு நீங்கிவிடும். பொறுமை, தைர்யம், வீர்யம், தேஜஸ் முதலிய குணங்கள் நம்மிடம் விளங்கும். 'இது வெறும் வார்த்தையன்று, உண்மையே' என்று ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் உறுதி கூறுகிறார்கள்.

பாராயணத்திலே சிரத்தைவேண்டும். அதற்கு அனுகூலமாக, ஸஹஸ்ர நாமங்களுக்கும் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் பாஷ்யஞ் செய்திருக்கிறார்கள். விஷ்ணுவின் நாமாக்களை ஸங்கீர்த்தனஞ் செய்வதால் பரிபூர்ண ஞானம் உண்டாகும் என்றும் புராண புருஷனை ஸ்துதிப்பவர்கள் உண்மை ஞானிகளாகிறார்கள் என்றும் கூறுகிறார்கள்.

கண்ணைக் கவரும் அழகிய மூன்றுவர்ணப் படங்களும் 248 பக்கங்களும் கொண்ட இந்தப் புஸ்தகத்திற்கு மிகவும் குறைந்த விலை ரூ. 1—4—0

கிடைக்குமிடம்:

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்,

ஸ்ரீ சங்கர மடம், கும்பகோணம்.

ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தில் வெளிவரும் புத்தகங்கள்

ஒவ்வொரு புத்தகத்திலும் பல படங்கள் உள்ளன. ரூ. அ.

*1. ஸ்ரீ மூகபஞ்ச சதீ — ஸ்ரீ மூககவி அருளிச் செய்தது. 500 ஸ்லோகங்கள் கொண்டது. தேவநாகரியிலும் தமிழ் மொழி பெயர்ப்பும். (2-ஆம் பதிப்பு). ... 1—4

2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் — ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் அருளிய பாஷ்யத்திற்குத் தமிழ் அனுவாதம் ஸ்ரீ வே. நாராயணன் எழுதியது. (2-ஆம் பதிப்பு). ... 1—4

3. ஸ்ரீ பஜகோவிந்தம் — ஸம்ஸ்க்ருத மூலமும் ஸ்ரீ ஏ. எஸ். நடராஜ ஐயர், பி.ஏ., எம்.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும். 0-2½

4. ஸ்ரீ ச்யாமளா தண்டகம் — இதை இயற்றியவர் ஸ்ரீ மஹா கவி காளிதாஸன்: ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் 0—6

5. ஸ்ரீ முகுந்தமாலா — ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளியது. ஸாஹித்ய வல்லப ஸ்ரீ T. ஸுந்தராசார்ய ஸ்வாமிகள், பி. ஏ., பி. எல்., எழுதிய விரிவுரையுடன் கூடியது. ... 0—5

6. ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா — ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் இயற்றியதை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் தமிழில் உபதேசித்தது. ... ... ... 0-2½

7. ஸ்ரீ விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம் — ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் இயற்றியது. தமிழ் ஆங்கில அனுவாதங்களுடன் கூடியது. ... ... ... 0—8

*8. ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர்கள் அருளிய சிவ மானஸிக பூஜா, கீர்த்தனங்கள், ஆத்ம வித்யா விலாஸ: என்னும் நூல்கள்: ஸ்ரீ வே. நாராயணன், எழுதிய தமிழ் ஆங்கில அனுவாதங்களுடன் கூடியவை. (2-ஆம் பதிப்பு). ... 0-10

9. ஸ்ரீ தீனாக்ரந்தனம் என்னும் ஸ்ரீ காசீ விச்வேச்வர ஸ்தோத்ரம் — ஸ்ரீ லோஷ்ட தேவர் ஸம்ஸ்க்ருதத்தில் இயற்றிய சுலோகங்களும், ஸ்ரீ. ஏ. எஸ். நடராஜ ஐயர், பி.ஏ., எம்.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும் கூடியது. ... 0—8

*10. ஸ்ரீ சாந்தி விலாஸம் — ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் ஸ்ரீ Y. மகாலிங்க சாஸ்திரியார், எம்.ஏ., பி.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும் கூடியது ... 0—6

*11. ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்திரமும் ஸ்ரீ Y. மகாலிங்க சாஸ்திரியார், M.A.,B.L., எழுதிய தமிழ், ஆங்கில அனுவாதங்களுடன் 0-10

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்.

* அச்சில் உள்ளது, சீக்கிரம் வெளிவரும்.

The Liberty Press, G.T., Madras

ஸ்ரீ காமகோ

*1. ஸ்ரீ

500

2. ஸ்ரீ

3.

# விஞ்ஞாபனம்

—

[ஆஸ்தி]கர்கள் அனைவரும் வைதிக மார்க்கத்திலே பற்றுடைய[வர்களாயும்] பகவானிடத்து பக்தி மிகுந்தவர்களாயும் சிரத்தையுடைய[வர்களாயு]ம் செய்வதற்கு அனுகுணமாக நமது ஸ்ரீ காமகோடி பீடாதி[பதிகளான] ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளால் ஸ்ரீ காமகோடி [கோச]ஸ்தானம் என்ற ஸ்தாபனம் ஒன்று இவ்வாண்டிலே தொடங்[கப்] பெற்றுள்ளது யாவரும் அறிந்ததே.

ஸ்ரீ ஆசார்யர்கள் சில ஆண்டுகளாக ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணத்தை எல்லோரும் பிரதிதினம் செய்து வரவேண்டுமென்று ஆக்ஞைசெய்து வருகிறார்கள். அதன்படி பாராயணஞ் செய்து, ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை மனப்பாடமாக்கிக் கொண்டவர்கள் ஸ்ரீ ஆசார்யர்களை "மேலே என்ன செய்வது?" என்று ஆக்ஞையிட வேண்டும் என்றபோது, ஸ்ரீ ஆசார்யர்கள் உபதேசித்ததாவது:

"ஸஹஸ்ரநாம பாராயணத்தால் உங்களுக்கு வாக் சுத்தியும் ஈச்வர கிருபையும் ஏற்பட்டிருக்கின்றன. இவற்றோடு சிறிது வேத பாஷா ஞானமும் ஏற்பட்டால் மேற்கொண்டு புண்ய நூல்களைப் பார்த்து நற்கதி யடைய ஸௌகர்யமாக இருக்கும். அதற்குப் பண்டிதர்கள் அகப்படாத இடங்களில், தமிழிலே பதவுரை பொழிப்புரைகள் எழுதப்பெற்றதாய்க் கோசஸ்தானத்தில் வெளியிடப்பட்டிருக்கும் பஜ கோவிந்தம் என்னும் நூலைத் தாமாகவே அர்த்தத்துடன் பாடமாக வாசித்து நெட்டுருச் செய்யவேண்டும். 'பஜ கோவிந்தம்' முடிந்த பிறகு, கோசஸ்தானத்தில் வெளியிடப்பட்டிருக்கும் ஸதாசிவ ப்ரம்மேந்திராள் ஸ்தோத்திர புஸ்தகத்தை அவ்விதமே பாடம் செய்ய வேண்டும். அதனை அடுத்து, லோஷ்டதேவருடைய தீனாக்ரந்தனம் என்னும் புஸ்தகத்தை அவ்விதமே பாடம் செய்யவேண்டும், அதற்குப் பிறகு, ஆதி ஆசார்ய ஸ்வாமிகளுடைய விஷ்ணு பாதாதிகேசாந்த ஸ்தோத்திரத்தைப் பாடம் செய்யவேண்டும். அதற்கும் பிறகு அநேகமாய்ப் பாதி வ்யுத்பத்தி ஏற்பட்டுவிடுமாதலால் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தைப் படித்து அதன் பொருளை அறிந்துகொள்ள வேண்டும்."

—காமகோடி, 19—10—'43.

இதற்குமேல் கோசஸ்தானத்திலிருந்து வெளியிடும் புதிய புத்தகங்களையும் அப்போதைக்கப்போது தருவித்து அர்த்தத்துடன் பாடம் செய்து, நலம் அடையவேண்டியதைப் பற்றியும் அதிகம் எழுதவும் வேண்டுமா?

**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்.**

10